

# காசிச் சத்திரம்

நகரத்தார்கள் செய்துள்ள அறங்களில் எல்லாம் சிறந்து அவற்றிற்கு மணிமுடியாய் விளங்குவது காசியில் அவர்கள் செய்துவரும் சமயப்பணி.

## சிவராத்திரி

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் போக்குவரத்து வசதி குறைவாக இருந்தது. தனியாகக் காசியாத்திரை செல்பவர்கள் பல இன்னல்களுக்கு ஆளாயினர். எனவே பலர் சேர்ந்து செல்லுவதும் சிவராத்திரியன்று காசியில் இருக்குமாறு யாத்திரையைத் தொடங்குவதும் வழக்கமாய் இருந்தது. குமரகுருபரர் மடத்திலும் வேறு சில இடங்களிலும் தங்கி விசுவேசுவரருக்குச் சிவராத்திரியன்று அபிசேகம் நடத்தியும் ஏழைகளுக்கு அமுது படைத்தும் வந்தனர்.

## கல்கத்தா நகரத்தார் ஏற்பாடு

பர்மாவில் ஆங்கிலேயர் ஆட்சியாலும் நகரத்தார் தொடர்பாலும் நெல் உற்பத்தி பெருகியது. சூயஸ் கால்வாய் வெட்டப்பட்டதால் இந்தக் குறுக்கு வழியாக ஐரோப்பாவிற்கு பர்மிய அரிசியை அனுப்புவதில் ஆங்கிலேய வணிகர்கள் ஆர்வம் காட்டினர். கல்கத்தாவில் தொழில் செய்த நகரத்தார்கள் பர்மிய அரிசியை ஏற்றுமதி செய்து செல்வமும் செல்வாக்கும் பெற்றனர். கப்பல் குழுக்கள் நகரத்தார்களுக்கு ஆண்டு இறுதியில் கேள்வுத்தொகையில் ஒரு பகுதியைத் திருபபிக் கொடுத்தனர். இவ்வாறு கழிவுத் தொகை ஆண்டுதோறும் 25000 ரூபாய் வந்தது.

இவ்வாறு கிடைத்த வருவாயைக்கொண்டு கல்கத்தா நகரத்தார்களால் ஹிந்துஸ்தானி கோசாயி சாதுக்கள் மடம் விலைக்கு வாங்கப் பெற்றது. 1863-ல் ருத்ரோத்காரி ஆவணி 10உயில் அந்த மடம் சில பகுதிகள் புதுப்பிக்கப்பெற்றும், பெரும்பகுதி புதிதாகக் கட்டப்பெற்றும் நாட்டுக் ோட்டை நகரச்சத்திரம் என்ற பெயரில் தொடங்கப்பெற்றது. அன்று ல் விசுவேசுவரர் விசாலாட்சி அன்னபூரணி துண்டி விநாயகர் கால ரவர் முதலிய மூர்த்திகளுக்கு நாள்தோறும் பூசைகள் சிறப்பாகச் யப்பட்டு வருகின்றன. அந் [illegible] றவிகளுக்கும் ஏழை





எளியோர்க்கும் உணவு படைக்க அன்னதானக் கட்டளைகள் ஏற்படுத்தி சத்திரத்தின் முக்கிய பணிகளுள் ஒன்றாக நாள்தோறும் அன்னதானம் செய்யப்பெறுகிறது.

## வடநாடெங்கும் நகரத்தார் சத்திரங்கள்

1880 முதல் கல்கத்தா நகரத்தார் பெரியஅளவில் செல்வம் ஈட்டினர். அதற்கேற்ப கல்கத்தா, காளிகாட், பிரயாகை, அயோத்தி, கயை, தாரகேசுவரம், கோதாவரி ஆகிய தலங்களில் கட்டிடங்கள் கட்டி, சத்திரம் அமைத்து இனிது நிகழவும் மூர்த்திகளைப் பிரதிட்டை செய்யவும் சிவப்பணிகள் செம்மையாய் நடைபெறவும் மூலதனம் வைத்தனர்.

இதே காலத்தில், பம்பாய் நகரத்தார்கள் நாசிக் பஞ்சவடியில் ஒரு சத்திரம் நிறுவி தண்டாயுதபாணி திருவுருவத்தைப் பிரதிட்டை செய்தனர். ஏனைய சத்திரங்கள் யாவும் கல்கத்தா நகரத்தாரின் பார்வையில் இயங்கி வந்தன. கல்கத்தா நகரத்தார்களுக்காகக் காசிச்சத்திரத்தை மேற்பார்வை செய்துவந்த தேவகோட்டை அரு. அரு. சோம. குடும்பத்திற்குக் கல்கத்தாவில் பிரபலமான தொழில் இருந்தது. அந்தக்கடையின் ஏஜெண்டு (தேவகோட்டை) சாமிநாதன் செட்டியார் அவர்கள் தங்கள் முதலாளி பெயருக்கு கல்கத்தா எஸ்ரா தெரு 34-ம் நம்பர் வீட்டை விலைக்கு வாங்கி அந்த நிதியிலிருந்து காசிச் சத்திரச் செலவுக்குப் பணம் அனுப்ப ஏற்பாடு செய்தார். இந்தச் சொத்திலிருந்து கிடைக்கும் வாடகை வருவாயே இன்றளவும் காசிச் சத்திரத்துக்கு முக்கியமான வருவாயாக இருந்து வருகிறது.

## இரங்கூனில் மேற்பார்வை

1900-ம் ஆண்டுக்குப் பின்னர் கல்கத்தாவில் நகரத்தார்களின் கடைகள், எண்ணிக்கையில் குறைந்தன. பல கடைகள் கல்கத்தாவிலிருந்து இரங்கூனுக்கு மாற்றப் பெற்றன. செல்வம் பெருக்கிய இரங்கூன் நகரத்தார்கள் சிவமும் பெருக்கலாயினர்.

1925 முதல் இரங்கூன் நகரத்தார்கள் காசிச் சத்திரத்துக்கு மகமை எழுதினர். சத்திரங்களைக் கவனிக்க 1934-ஏப்ரல் 13க்கு பவ சித்திரை முதல் தேதி இரங்கூன் நகரத்தார்கள் கூட்டத்தில் கீழ்க்கண்டவர்கள் அடங்கிய குழு தேர்ந்தெடுக்கப்பெற்றது.

36/5

தலைவர் : சா. அ.ச. இராமன் செட்டியார், 116, மொகல் வீதி

உபதலைவர் : மு. அழ. நாராயணன் செட்டியார், 100, மொகல் வீதி

காரியதரிசி : சுப. க. அ. லெட்சுமணன் செட்டியார், 70, மொகல் வீதி

அங்கத்தினர்கள் : ராம. அரு. அரு. ராம. அருணசலஞ் செட்டியார்
கூ. அரு. க. சுப்பிரமணியன் செட்டியார்
அ. க. அ. சித. வெ. சிதம்பரஞ் செட்டியார்
அழ. வீர. பெ. சிவப்பிரகாசஞ் செட்டியார்

10—9—1934ல் இதற்கென ஒரு மேனேஜிங் சொசைட்டி பதிவு செய்யப்பெற்றது.

### மகமை

இரங்கூன் நகரத்தார்கள் தண்டாயுதபாணி கோயிலுக்குத் தைப்பூச மகமை எழுதிவருவதோடு காசிச்சத்திரத்துக்கு ரூ. 1000/-க்கு அரைக்கால் வீதம் ஆண்டுதோறும் மகமை எழுதி வருவதென்றும், நாட்டுப்புறங்களில் உள்ள நகரத்தார்களை ரூ. 1000க்கு வீசம் வீதம் மகமை எழுதச் செய்வது என்றும் மலாயா, செய்கோன், இலங்கை நகரத்தார்களிடமும் மகமை வசூலிப்பது என்றும் முடிவு செய்யப்பெற்றது.

### நடப்புச் செலவு

கல்கத்தாவிலும், கோதாவரியிலும் அந்தந்த ஊர்களில் கிடைத்த வாடகைகளைக் கொண்டே எல்லாச்செலவுகளும் செய்யப்பெற்று வந்தன. ஏனைய சத்திரங்களுக்கும் வாடகைக் கட்டிடத்தில் நடந்துவந்த அரித்துவார் சத்திரத்துக்கும் இரங்கூன் தலைமைக் காரியாலயத்திலிருந்து மாதம் ரூ. 3000/- அனுப்பப்பெற்று வந்தது.

### ஆட்சி முறை

காசி விசுவேசர் கோவில் மகந்து பங்காளிகளுக்குள் கோவில் நிர்வாகம் பற்றிச் சச்சரவு உண்டாகி அலாகாபாத்தில் வழக்கு நடந்தது. மகந்துகளுக்குள் ஒற்றுமையில்லாத நிலையில், காசி விசுவேசுவரர் கோவில் நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பை, நகரத்தார்களே ஏற்க வேண்டும் என்று அலாகாபாத் உயர்நீதி மன்றம் ஆணையிட்டது. இந்நிகழ்ச்சி நகரத்தார்களுடைய ஆழ்ந்த தெய்வப் பற்றுக்கும், அதை வடஇந்திய

மக்கள் மதித்ததற்கும் சான்ருகும். காசி நகரச்சத்திர ஏஜண்ட், கோயில் ரிசீவராக இருந்து வந்தார்.

## 1942—1952

1942ல் பர்மாவில் ஜப்பானியருடைய ஆட்சி ஏற்பட்டு இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் போக்குவரத்து தடைப்பட்டது. சத்திரங்கள் இந்தியாவில் இருந்ததால் அவற்றை நடத்தும் பொறுப்பையும், செலவுக்குப் பணம் அனுப்பும் கடமையையும் இந்தியாவில் இருந்த நகரத்தார்கள் பலர் ஏற்றுச் செவ்வனே செய்தனர்.

## போருக்குப் பின்

8—6—1953க்கு விஜய வைகாசி 26உ இரங்கூன் நகரத்தார்கள் கூடி, புதிய நிர்வாக சபையும், காரிய சபையும் தேர்ந்தெடுத்தனர். மலாய் நாட்டில் நன்கொடை வசூலிக்க, இரங்கூன் சொ. மு. அ. மெ. ராம. ஏஜண்டு இராமச்சந்திரபுரம் பழ. சண்முகம் செட்டியார் அவர்களும், இரங்கூன் ராம. பெ. அழ. ஏஜண்டு அண்ணுமலே செட்டியார் அவர்களும் பினங்கு முதல் சிங்கப்பூர் வரை பல ஊர்களுக்குச் சென்று நகரத்தார்களைச் சந்தித்தனர். இதன் பயனுக மலாயா நகரத்தார்கள் ரூ. 80,666 நன்கொடை வழங்கினர்.

காசிச் சத்திரத்தின் வளர்ச்சிக்கும் பெருக்கத்துக்கும் ஆதியில் கல்கத்தா நகரத்தார்களும், திருப்பணிச் செல்வர்களாகிய தேவகோட்டை நகரத்தார்களும் பிறகு பர்மா நகரத்தார்களும், போக்குவரத்துத் தடைப்பட்ட காலத்தில் தேவகோட்டை தி. ராம. தி. சு. தி. தின்னப்ப செட்டியார் அவர்கள் போன்ற பலர் பார்வையில் இந்தியாவில் உள்ள நகரத்தார்களும், இரண்டாம் உலகப்போர் முடிவடைந்தபின் இன்றளவும் மலாயா நகரத்தார்களும் பெரிதும் உதவியுள்ளனர்.

1959-ல் இரங்கூனிலிருந்து பழ. சண்முகம் செட்டியார் அவர்களும் ராம. வீர. ராம அவர்களும் காசிக்குப் போய், சொசைட்டி உத்தரவுப்படி, அன்ருட உபயோகத்தில் இல்லாதிருந்த உபரி நகைகள், வெள்ளிச் சாமான்களை ரூ. 44,579 க்கு விற்று, பணத்தை பேங்கில் சமால் செய்தனர்.

1863-ல் காசிச் சத்திரத்திற்குக் கட்டிடம் கட்டப்பட்டதன் நூற்ருண்டுவிழா 1963-ல் சிறப்பாகக் கொண்டாடப்பெற்று, நூற்ருண்டு மலர்

வெளியிடப்பெற்றது. கல்கத்தா நகரேசுவரர் கோவிலுக்குப் புதிதாக சிங்கார முருகேசர் திருவுருவம் செய்து வைக்கப்பெற்றது. பர்மா கம்பை தனவைசியர் கல்விக் கழகத்தார் கியா ஒரு லட்சத்து ஒன்று காசிச்சத்திரத் துக்கு வழங்கினர்.

## நூற்றுண்டு விழாவுக்குப்பின்

நூற்றுண்டு விழாவுக்குப்பிறகு, காசிச்சத்துக்கு நகரத்தாரிடையே நல்ல விளம்பரம் ஏற்பட்டிருக்கிறது. பர்மாவில் ஏற்பட்ட மாறுதல்களால் இந்தியாவிலேயே இடைக்காலக் குழு வொன்றைப் பர்மா நகரத்தார் நியமித்தனர். இந்தக் குழு 12—4—1964 முதல் 8—2—1970 வரை செயல்பட்டது. இதன் செயலாளராக, (இப்போது செயலாளராக உள்ள) நாட்டரசன்கோட்டை கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் இருந்து வந்தார்கள். இடைக்காலக் குழுவின் செயல்களில் குறிப் பிடத்தக்கது. 2—8—1967-ல் மதுரையில் ஒன்றரை லட்சம் ரூபாய்க்கு ஒரு கட்டிடம் வாங்கி, புதுப்பிக்கப் பெற்றதாகும். நூற்றுண்டு விழாக் காலத்தில் காசியில் ஏஜண்டாக இருந்த நாட்டரசன்கோட்டை அ. பெரி. கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள் காசிச் சத்திரத்திற்குச் செய்திருக் கும் தொண்டுகள் மிகவும் போற்றுதற்குரியன,

## 96 ஊர்க்கூட்டம்

9—2—1970ல் கோவிலூரில் 96 ஊர் நகரத்தார்கள் கூடி, மூன்று ஆண்டுகளுக்கு ஒரு காரிய சபையைத் தேர்ந்தெடுத்தனர். விவரம் பிற் சேர்க்கையில் காண்க.

சபையின் தலைவராக தேவகோட்டை ஜமீன்தார் உயர்திரு. அழ. அரு. சோமநாதன் செட்டியார் அவர்கள் ஒரு மனமாகத் தேர்ந் தெடுக்கப் பெற்றுர்கள். இவர்கள் தந்தையார் இருபது லட்சம் செலவில் இராமேசுவரத்தில் திருப்பணியும், பெரும் பொருள் செலவில் காளையார் கோவில் முதலிய பிற தலங்களில் திருப்பணிகளும் செய்தவர்கள் ஆவார்கள்.

உயர்திரு. சோமநாதன் செட்டியார் அவர்கள் இராமேசுவரம் இராம நாதசாமி கோவிலின் பரம்பரை டிரஸ்டி என்ற முறையில் காசி — இரா மேசுவரம் தொடர்பின் அடையாளமாக விளங்குகிறுர்கள். ஆண்டு தோறும் தீபாவளிக்கும் பிற நாட்களிலும் காசிக்கும் போய்வருவதால்

முப்பது ஆண்டுகளாகக் காசிச் சத்திரத்தின் நடைமுறைகளை இவர்கள் நன்கு தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.

## ஆட்சி முறை

1970 முதல் காரிய சபை (செயற்குழு) இவர்கள் தலைமையில் இரண்டு மாதத்துக்கு ஒருமுறை கூடி, சத்திரங்களின் நிர்வாகங்களைக் கவனித்தும் கொள்கைகளை வகுத்தும், கணக்குத் தணிக்கையாளர்களை நியமித்தும் கணக்குகளைச் சரிபார்த்தும் வருகிறது.

300 புள்ளிக்கு குறைந்த ஊர்கட்கு ஒருவரும் 300 புள்ளிகளுக்கு மேற்பட்ட ஊர்களுக்கு அதற்கேற்பவும் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதித்துவ சபை ஆண்டுக்கு இருமுறை கூடுகிறது

காரைக்குடியில் மேலமடத்தில் காசிச் சத்திரத்தின் அலுவலகம் உள்ளது. இந்த அலுவலகத்தில் நாட்டரசன் கோட்டை லெ நா. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் பணிபுரிந்து வருகிறார்கள் இங்கு, காசிச் சத்திர நூற்றாண்டு மலரும், காசித் திருநீறு, காசிக் கயிறு, கங்கை தீர்த்தம் முதலியவையும் விற்பனை செய்யப்பெறுகின்றன. கங்கைத் தீர்த்தத்தின் விலை படி மூன்று ரூபாய் ஆகும். மேலும் காசிக்குச்செல்லுபவர்களுக்கு அறிமுகக் கடிதங்களும் கொடுக்கப்பெறுகின்றன. சாந்திக்காரர்கள் வசதிக்காக ஹோமத்துக்கு, காசியிலிருந்து எவை நெல் வரவழைத்து வைக்கவும் ஏற்படாகியிருக்கிறது.

## ஓராண்டுச் சாதனை

செயற்குழு கடந்த ஓராண்டில் செய்துள்ள வேறு பல செயல்கள் வருமாறு :

1. எல்லாக் கணக்குகளும் ஆடிட்டர்கள் கருத்துப்படி செம்மைப் படுத்தப்பட்டு வருகின்றன.

2. சம்பளங்கள் உயர்த்துவது முதலியன பற்றி, சில முறையான கொள்கைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

3. பணங்கள் யாவும் இருவர் பெயரால் கூட்டுக் கையெழுத்தில் பாங்குகளில் டிபாசிட் செய்யப்பெற்று வருகின்றன.

4. காசிச் சத்திரத்தைச் சேர்ந்த சொத்துக்களிலிருந்து கூடுதலான வாடகைகள் கிடைக்க ஏற்பாடாகி இருக்கிறது. கல்கத்தா ஏஜண்டு ராம.

முயற்சியால், கல்கத்தாக் கட்டிடத்தில் வாடகைகள் உயர்த்தப் பட்டுள்ளன. சொத்துக்கள் யாவும் பழுதுபார்க்கப்பட்டும் புதுப்பிக்கப் பட்டும் வருகின்றன. காசியில் ஐந்து கடைகள் கட்டி வாடகைக்குவிடப் பட்டிருக்கின்றன. பசுமடம் இருந்த இடம், பிறர் பொசிசனில் இருந்து வந்தது. அதில் ஒருபகுதியை மீண்டும் நாம் ஒப்புக்கொண்டுள்ளோம். தாரகேசுவரத்தில் 15,000 ரூபாய் செலவில் புதிதாகக் கட்டிடம் கட்டி வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது. கல்கத்தா கட்டிடத்தில் சீர்திருத்தங் கள் செய்யப்பட்டுள்ளன. மேற்கண்ட வகைகளால், வாடகை வருமானத் தில் புதிதாக ரூ. 1,500 மாதந்தோறும் கிடைத்துவருகிறது.

5. கல்கத்தா கட்டிடத்தில் மேலும் சீர்திருத்தங்கள் செய்து வாடகை வருவாயைக் கூடுதலாக்க, முயற்சி மேற்கொள்ளப்பெற்றிருக் கிறது

6. காளிகட்டத்திலும் கோதாவரியிலும் உள்ள சொத்துக்கள் பயன் படாமல் உள்ளன. சந்தர்ப்பம் பார்த்து அவற்றை விற்றுவிட முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

7. நகரத்தார்கள் அவ்வப்போது தெரிவிக்கும் யோசனைகளும் குறைபாடுகளும் கவனிக்கப்படுகின்றன.

8. வரவேண்டிய சொத்துக்களையும் பாக்கிகளையும் பெற இயன்ற அளவு எல்லாவகைகளிலும் ஆவன செய்யப்படுகின்றது.

9. தலைவர் அவர்களும் காசியிலுள்ள ஏஜண்டு வினைதீர்த்தான் செட்டியார் அவர்களும் நன்கொடை தரக்கூடிய பலரையும் சந்தித்து அவர்கள் வாயிலாக காசிச் சத்திரத்துக்கு வேண்டிய உதவிகளைப் பெற்று வருகிறார்கள். தெற்கு வட்டகை நகரத்தார்ப் பெண்கள் காசி யாத்திரை சென்றவர்களிடம் ரூ. 1200 பெற்று மேலும் சத்திரத்துப் பணத்திலிருந்து செலவு செய்து, காசி நகரச்சத்திரத்தில் மோட்டார் பம்ப் செட் போட்டு, தண்ணீர் வசதி செய்யப்பட்டிருக்கிறது. ஆண்டுதோறும் கூடிவரும் யாத்திரையாளர்களுக்கு இன்றியமையாத ஒரு தேவை நிறைவேற்றப் பட்டிருக்கிறது. நந்தவனத்தில் நேமத்தான்பட்டி சடையப்ப செட்டியார் அவர்கள் 5000 ரூபாய் செலவில் குழாய் வசதி செய்து கொடுத்திருக்கிறார் கள்.

10. காசி விசுவேசர் கோயிலில் மடைப்பள்ளியைப் புதுப்பித்துக் கொடுக்க முடிவு செய்யப்பெற்றிருக்கிறது.

11. காசியில் நகரத்தாருக்குச் சொந்தமாக உள்ள விசாலாட்சி கோவிலில் விசாலாட்சி அம்மனின் திருவுருவம் பின்னப்பட்டிருப்பதால் புது விக்கிரகம் செய்து அனுப்பவும் கும்பாபிஷேகம் செய்யவும் முடிவு செய்யப்பெற்றிருக்கிறது.

12. தங்குபவர்கள் நலம் கருதி, காசியில் நம் சத்திரத்தில் தொலை பேசி (டெலிபோன்) வைக்கப்பட்டிருக்கிறது. எண். வாராணசி 62076

13. மேற்படி சத்திரத்தில் நகரச்சத்திரம் என்ற பெயரில் ஓர் அஞ்சல் நிலையம் திறக்கவும், தபால் தந்தித் துறையினருடன் பேச்சு வார்த்தை நடந்து வருகிறது.

14. காசியில் புதிய மேளகாரர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

15. அயோத்தியில்

அ) குழாய் போட்டுத் தண்ணீர் வசதி செய்யப்பட்டிருக்கிறது

ஆ) ஸ்ரீ ராம நவமித் திருவிழா இடையில் நின்றிருந்தது இப்போது மீண்டும் நடத்தப்பெற்று வருகிறது.

இ) சரயு ஆற்றங்கரையில் நகரத்தாருக்குச் சொந்தமான ஒரு கோயில் இருக்கிறது. அதை மீண்டும் ஒப்புக்கொண்டு, தினசரி பூசைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

16. கயாவில் உள்ள நம் விடுதியைப் பழுது பார்க்க முடிவு செய்துள்ளனர். இதற்கு ரூ. 20,000 ஆகும்.

17. தாரகேசுவரத்தில் மேலும் கட்டிடங்கள் கட்டவும் வருவாயைப் பெருக்கவும் திட்டங்கள் உள்ளன.

18. நாசிக் பஞ்சவடியிலுள்ள கார்த்திக் சுவாமி மந்திர் என்ற நமது முருகன் கோயிலைப் பழுதுபார்க்கவும் கோபுரத்தைப் புதுப்பிக்கவும் கும்பாபிஷேகம் செய்யவும் முடிவாகியிருக்கிறது. இதற்கு, பம்பாய் நகரத்தார்கள் கணிசமான தொகை தர முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஏனையோரும் தரலாம்.

19. ஹரித்துவாரத்தில் இப்போது நமக்கு விடுதி இல்லை. வாடகைக் கட்டிடம் பிடித்து ஒரு விடுதி ஏற்படுத்தும் வாய்ப்பை ஆராயும்படி செயற்குழு, தலைவர் அவர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறது.

20. பம்பாயிலிருந்து வெளிவரும் இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி இதழிலும், இந்திய அரசு தேசியப்புத்தகக்கழகத்தின் வாயிலாகத் தமிழ்நாட்டைப் பற்றி 15 மொழிகளில் வெளியிடவிருக்கும் நூலிலும் நமது காசிச் சத்திரத்தைப்பற்றிய விவரங்கள் வெளியிட ஆவன செய்யப்பெற்றிருக்கிறது.

21. சென்னையிலுள்ள பவளக்காரத்தெரு 3/4 எண்களிலுள்ள இரங்கூன் நகரவிடுதி இன்னும் பர்மாவில் உள்ள தருமபரிபாலன சபையின் பார்வையில் இருந்து வருகிறது. நகரத்தார் அனைவரும் பர்மாவிலிருந்து வந்துவிட்டதாலும், வெளிநாட்டிலுள்ள நிர்வாகத்தினருக்குச் சொந்தமாக இந்தியாவில் சொத்துக்கள் இருப்பதைக் கட்டுப்படுத்தச் சட்டங்கள் ஏற்பட்டு வருவதாலும் இதன் பொறுப்பை இந்தியாவிற்கு மாற்ற வேண்டுவது உடனடியான தேவை.

மேற்படி விடுதியை, காசிச் சத்திரத்துக்கு நன்கொடையாகத் தந்துவிட வேண்டும் என்று காசிச் சத்திரச் செயற்குழு இரங்கூனில் உள்ள தரும பரிபால்ன சபைக்கும் இரங்கூனில் உள்ள நம்மவர்களுக்கும் எழுதிக் கேட்டுக்கொண்டிருக்கிறது. இரங்கூன் கடைகாரர்களும் காரைக்குடியில் 1970ல் கூடி ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். இரங்கூன் கடைக்காரர்கள் ஒவ்வொருவரும் இரங்கூனுக்கு எழுதி, உடனே மேற்படி விடுதிகளின் உடைமையும் உரிமையும் பர்மாவிலிருந்து காசிச் சத்திரத்துக்கு மாற்றப்பட ஆவன செய்ய வேண்டும்.

முடிவுரை

காசியில் நம் சத்திரத்தில் தங்குவதற்கு முதல் மூன்று நாட்களுக்கு ஐந்து ரூபாயும் அதன் பிறகு பெரியவர்களுக்கு நான்கு ரூபாயும் குழந்தைகளுக்கு இரண்டு ரூபாயும் மகமையாக வசூலிக்கப்பெறுகிறது. இவ்வாறு கிடைக்கும் வருவாய், காசிச் சத்திரக் கட்டிடத்திற்கு நாம் காசி நகராண்மைக் கழகத்துக்குக் கட்டிவரும் வரிகளுக்கோ, மின்சாரக் கட்டணங்களுக்கோ கூடப் போதவில்லை. எனவே சத்திரத்திற்கு யாத்திரையாளர் கொடுக்கும் தொகையை வைத்துச் சத்திரம் நடத்தவோ, விசுவேசர் கோயிலில் நம் கடமைகளைச் செய்யவோ இயலாது.

சொத்துக்களின் வருவாயிலிருந்தும் நகரத்தார்கள் வரையாது வழங்கி வரும் கட்டளைகளிலிருந்தும்தான் இந்த அறச் செயல்கள் என்றென்றும் நடைபெறும். இதுவரை ஏற்பட்டுள்ள கட்டளைகளின் விவரம் பிற்சேர்க்கையில் கொடுக்கப்பெற்றிருக்கிறது.

கட்டிடங்களைப் புதுப்பிப்பதாலும், விலைவாசி ஏற்றத்தாலும், சம்பளங்கள் உயர்வாலும், யாத்திரை செய்பவர்களுக்குப் புதிய வசதிகள் செய்வதாலும், ஆண்டு தோறும் செலவுகள் கூடுதலாகி வருகின்றன. எனவே, புதிய கட்டளைகள் ஏற்படுத்தியும், உள் நாட்டிலுள்ள கடைகளும் குறைந்தது ஆண்டுக்கு ரூ. 6·25 வீதம் மகமை எழுதியும், வசதி படைத்தவர்கள் நன்கொடைகளை நல்கியும் காசிச் சத்திரத்தின் அறப் பணிகள் தொடர்ந்து இனிது நிறைவேற உதவி, காசி விசுவேசர் திருவருளைப் பெற்றுச் சிறக்க வேண்டுகிறோம்.

## பிற்சேர்க்கை

### ஸ்ரீ காசி நகரச் சத்திரத்தில் நகரத்தார்கள் உதவி வரும் கட்டளைகள் விவரம்

1. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு உஷத் கால பூஜை. திருவனந்தல். பள்ளத்தூர் சொ.மு.அ.மெ.ராம.சோ. ராமையா செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 240.

2. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு மூன்று கால பூசை சந்தன அபிசேகத்திற்கு சந்தனம் அனுப்பிவருதல் வருடத்திற்கு ஒரு முறை சென்னை ஏ.வி.எம். மெய்யப்ப செட்டியார்.

3. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு நெய்தீபத்திற்கு கண்டரமாணிக்கம் உல.மெ.சொ. கருப்பய்யா செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூ. 109

4. ஊதுபத்திக் கட்டு வருடத்திற்கு ஒருமுறை அனுப்பிவருதல் கண்டனூர். (சென்னை) ராம. வீர. வீரப்ப செட்டியார்.

5. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு தினம் அர்ச்சனைக்கு முக்களை வில்வக் கட்டளை. கோயம்புத்தூர். (தேவகோட்டை தெற்கு வீடு) அரு. லெ. வெ. நடராஜன் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூ. 25.

6. ஜவ்வாது அரகஜா கட்டளை. தேவகோட்டை தி. ராம. தி. சு. தி. பழ. பழனியப்ப செட்டியார்.

7. பழநி வீபூதிக் கட்டளை. பழநி, வே.ஆ.ஆ. வே. கடை, வருடம் ஒன்றுக்கு மூடை 2.

8. கற்பூரக் கட்டளை. கண்டரமாணிக்கம், செ. சி. நா. ராம. இராமநாதன் செட்டியார், வருடம் ஒன்றுக்கு ரூ. 25.

9. கற்பூரக் கட்டளை. தேவகோட்டை, பழ. சோம. கயி. மனைவி லெட்சுமி ஆச்சி, வருடம் ஒன்றுக்கு ரூ. 25.

10. பன்னீர்க் கட்டளை. நேமுத்துப்பட்டி, சித. அருணாசலம் செட்டியார் (அஜந்தா பிக்சர்ஸ்) வருடம் ஒன்றுக்கு ரூ: 300. *

11. கெங்கை அபிஷேக கட்டளை. தேவகோட்டை, மு. ப. சி. கரு. சுப. சுப்பிரமணியன் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூ. 30.

12. ஸ்ரீ காசி விஸ்வேஸ்வரர் கோவிலில் கோபுரத்தில் மெர்க்குரி லைட்டு அமைத்து கரண்டு சார்ஜ் கொடுத்து வருதல். காரைக்குடி, சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார்.

13. விபூதி அபிஷேகக் கட்டளை. நற்சாத்துபட்டி. கு. ராம. கும. ராம. ஏகம்மை ஆச்சி வருடம் ஒன்றுக்கு ரூ. 50.

14. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு குளிர்காலச் சட்டை தைத்து வருடத்திற்கு ஒருமுறை சாத்துதல். காரைக்குடி முத்துப்பட்டணம், (புதுக்கோட்டை, மெடிகல் யூனியன்) அ. ராம. கதி. ராம. சுப்பிரமணியன் செட்டியார்.

15. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு வருடம் ஒரு முறை பட்டு சாத்துதல். காரைக்குடி, சாரதா விலாஸ், சுப. சித. சிதம்பரம் செட்டியார், வருடம் ஒன்றுக்கு ரூ. 50.

16. தேன் அபிசேக கட்டளை. கா. முத்துப்பட்டணம், (மைசூர்) சி. சுப. வினைதீர்த்தான் செட்டியார், தேன் ஒரு தகரம்.

17. கற்பூரக் கட்டளை. தேவகோட்டை, மு. ப. ந. உமையாள் ஆச்சி, வருடம் ஒன்றுக்கு ரூ. 25.

18. பூக் கட்டுவதற்கு வாழை நார் அனுப்புதல். திருச்சி தென்னூர் (தேவகோட்டை) ப. ராம. செ. செல்லப்ப செட்டியார்

19. சூடக்கட்டளை. நேமத்தான்பட்டி (சென்னை) மு. கரு. சடையப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாப் 300.

20. குங்குமப்பூக் கட்டளை. சென்னை வி. அருணாசலம் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 150 *

21. அத்தர் கட்டளை. கரு. கும. மீ. மீனாட்சிசுந்தரம் செட்டியார் காரைக்குடி

---

* சில காலமாக வரவில்லை

## வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியார், ஏஜண்டாக வந்தபின் ஏற்பட்ட கட்டளைகள்

22. ஸ்ரீ நகரேஸ்வரர் கோவிலில் ஸ்ரீ சுப்பிரமணியர் சந்நிதானத்தில் டியூப் லைட்டு அமைத்து கரண்டு செலவு தருதல். வலையபட்டி (கோவை) சித. சா. சிதம்பரம் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25.

23. பச்சைக்கற்பூரக் கட்டளை. தேவகோட்டை (சென்னை) சு. லெ. ராம. தெய்வானை ஆச்சி. வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25.

24. சூடக்கட்டளை. ராங்கியம் வ. மு. பெ. முத்துக்கருப்பி ஆச்சி வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25.

25. சாம்பிராணிக்கட்டளை. தேவகோட்டை (திண்டிவனம்) பழ. வெ. ராம. லெ. சி. குப்பான் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25.

26. ஸ்ரீ நகரேஸ்வரர் கோவிலில் பிரதோசக்கட்டளை உற்சவம் ஸ்ரீ பிரதோச நாயகர் ரிசப வாகனத்தில் எழுந்தருளச் செய்தல். ஒக்கூர் (மதுரை) சி. கரு. அரு. சோம. ராமநாதன் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 250.

27. குங்குமப்பூக் கட்டளை. ராங்கியம் (தஞ்சாவூர்) நா. அ. சிதம்பரம் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25.

28. பன்னீர் அபிசேகக் கட்டளை. தேவகோட்டை (பொள்ளாச்சி க்வாலிட்டி ஸ்பின்னிங் மில்ஸ்) உ. மு. சுப. லெ. மெய்யப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 500.

29. தேன் அபிசேகக் கட்டளை. சென்னை முருகப்பா அன் சன்ஸ் மு. மு. முத்தையா செட்டியார்.

30. ஸ்ரீ நகரேஸ்வரர் கோவில் சதுர்த்தி உற்சவக் கட்டளை. இளையாத்தக்குடி கோவில் ஒக்கூர் நகரத்தார் வருடம் ஒன்றுக்கு ரூ. 400.

31. ஸ்ரீ விஸ்வேஸ்வரர் அர்த்தசாம பஞ்சாமிர்த அபிசேகக்கட்டளை. கொப்பனாபட்டி மு. ப. மு. ராம. ராமசாமி செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 211.

32. கற்பூரக் கட்டளை. தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு. மெ. குடும்பத்தார்.

33. குங்குமப்பூக் கட்டளை. சொக்கனாதபுரம் (அறந்தாங்கி) சொ. கா. காசி விஸ்வநாதன் செட்டியார். வருடம் ஒன்றுக்கு ரூ. 31

34. பேரிச்சம்பழக்கட்டளை. தேவகோட்டை (திருவாரூர்) நாக. பழ. ச. வெ. சுப. மீ. குடும்பத்தார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25

35. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு தேசி சீனி அபிசேகக் கட்டளை. வலையபட்டி நா. அ. நா. நாகப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 150.

36. ஸ்ரீ விஸ்வேஸ்வரர் விபூதி அபிசேகக் கட்டளை. ஷெ நாகப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு, பழநி விபூதி முடை ஒன்று.

37. ஸ்ரீ தங்க விசாலாட்சி அம்பாளை தீபாவளி அன்று முதல் மூன்று நாட்களுக்கு அலங்காரம் செய்து பூஜை செய்ய ஷெ நாகப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 101.

38. ஸ்ரீ விஸ்வேஸ்வரர் அர்த்தசாம பூஜையில் பேரீச்சம்பழம் நிவேதனம் செய்ய காரைக்குடி கரு. வ. அழ. அழகப்ப செட்டியார் மணைவி சிவகாமி ஆச்சி, வருடம் ஒன்றுக்கு ரூபாய் 101.

39. ஸ்ரீ விஸ்வேஸ்வரர் அர்த்தசாம பூஜையில் கிஸ்மிஸ்பழம் நிவேதனம் செய்ய கீழச்சிவற்பட்டி தெ. மு. கரு. சொ. தியாகராசன் செட்டியார், வருடம் ஒன்றுக்கு ரூபாய் 100.

40. ஸ்ரீ நகரேஸ்வரர் கோவிலில் ஸ்ரீ நடராசருக்கு வருடத்தில் ஆறு முறை அபிசேகம் நடத்திவர மேற்படி தியாகராசன் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 101.

41. ஸ்ரீ நகரேஸ்வரர் கோவிலில் கார்த்திகை தோறும் ஸ்ரீ சுப்பிரமணியர் வெள்ளி மயில் வாகனத்தில் எழுந்தருளச் செய்தல் உற்சவம் காரைக்குடி அ. அழ. அழகப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூ. 201.

42. ஸ்ரீ விஸ்வேஸ்வரர் அர்த்தசாம பூஜையில் கற்கண்டு நிவேதனம் செய்து வர காரைக்குடி (சென்னை) மெ. ய. ஆ. அ. நா. நாச்சியப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 111.

43. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு தினமும் அர்த்தசாமத்தில் புனுகு சாத்தி வருதல். பள்ளத்தூர் (சென்னை) பழ. லெட்சுமி ஆச்சி வருடம் ஒன்றுக்கு ரூபாய். 116.

44. ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு அர்த்தசாம பூஜையில் தினம் ஆரஞ்சுப் பழச்சாறு அபிசேகம். நாச்சியாபுரம் கரு. தெ. வே. வேலாயுதம் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூபாய் 201.

45. குங்குமப்பூக்கட்டளை. தேவகோட்டை ஆவிக. மெ. அரு. தி. வள்ளியம்மை ஆச்சி வருடம் ஒன்றுக்கு ரூபாய் 25.

46. தீபாவளி அன்று ஸ்ரீ நகரேஸ்வரர் கோவிலில் எல்லா சுவாமி களுக்கும் சிறப்பாக அபிசேகம் அலங்காரம் ஆராதனை புதிய பரிவட்டங்கள் சாத்தி அர்ச்சனைகள் செய்யவும் தீபாவளி அன்று வந்திருக்கும் நகரத்தார் களுக்கும் ஏனையோர்க்கும் காலைச்சிற்றுண்டி விருந்து படைக்கவும் பனையப்பட்டி சுப சொ.சி.தி. தியாகராசன் செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூ. 301.

47. மகாசிவராத்திரி அன்று பகலில் சாதுக்கள் சாப்பிடவும் இரவில் கோவில்களில் நான்கு காலப் பூஜை நடத்தவும், கோனபட்டு (மதுரை) மெ. மு மு. ராம. முத்தழகப்ப செட்டியார் வருடம் ஒன்றுக்கு ரூ. 251.

48. கோவில் உபயோகத்திற்கு ஏலக்காய் அனுப்பிவருதல். உத்தம பாளையம் (தேவகோட்டை, தொண்டியார்வீடு) அண. அரு. அண்ணாமலை செட்டியார் வருடத்திற்கு அரைக் கிலோ ஏலக்காய்.

## திரு, வினைதீர்த்தான் செட்டியார் ஏஜண்டாக வந்தபின் அவர்கள் முயற்சியால் ஏற்பட்டுள்ள ஆண்டுக் கட்டளைகள் விவரம்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | பினாங்கு | நகரத்தார்கள் | வருடம் | 5க்கு | ரூ. | 2,500 |
| 2. | ஈப்போ | ,, | ,, | 5க்கு | ரூ. | 2,500 |
| 3. | சிரம்பான் | ,, | ,, | 5க்கு | ரூ. | 3,000 |
| 4. | மலாக்கா | ,, | ,, | 6க்கு | ரூ. | 3,000 |
| 5. | டெலுக்காஞ்சன் | ,, | ,, | 4க்கு | ரூ. | 2,000 |
| 6. | கூலிம் | ,, | ,, | 5க்கு | ரூ. | 1,705 |
| 7. | கிள்ளான் | ,, | ,, | 4க்கு | ரூ. | 2,019-80 |
| 8. | கோலாலம்பூர் | ,, | ,, | 6க்கு | ரூ. | 3,000 |
| 9. | செய்கோன் | ,, | ,, | 2க்கு | ரூ. | 1,000 |
| 10. | சுங்குரும்பை | ,, | ,, | 6க்கு | ரூ. | 1,500 |
| 11. | பாரப்பந்தா | ,, | ,, | 1க்கு | ரூ. | 600 |
| 12. | கிட்டா | ,, | ,, | 1க்கு | ரூ. | 500 |
| 13. | மூவார் | ,, | ,, | 2க்கு | ரூ. | 700 |
| 14. | பத்துப்பகாட் | ,, | ,, | 3க்கு | ரூ. | 1,050 |
| 15. | தைப்பிங் | ,, | ,, | 1க்கு | ரூ. | 300 |
| 16. | சிங்கப்பூர் | ,, | ,, | 4க்கு | ரூ. | 2,031 |

## 9—2—70ல் தேர்ந்தெடுக்கப்பெற்ற காரிய சபை (செயற்குழு)

### தலைவர்

அழ. அரு. சோமநாதன் செட்டியார் அவர்கள்

### துணைத் தலைவர்கள்

ஒக்கூர் சி. க. அரு. சோம. இராமநாதன் செட்டியார் அவர்கள்
காரைக்குடி மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்

### செயலாளர்

நாட்டரசன்கோட்டை கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்

### துணைச் செயலாளர்கள்

காரைக்குடி மெ. செ. ச. மு. முத்துராமன் செட்டியார் அவர்கள்
வலையபட்டி மது. கும. மதுவப்ப செட்டியார் அவர்கள்

### பொருளாளர்

தேவகோட்டை அ. ராம. அ. லெ. அ. முத்துவீரப்ப செட்டியார் அவர்கள்

### உறுப்பினர்கள்

| | |
|---|---|
| ராயவரம் | ராம. சீனிவாசன் செட்டியார் அவர்கள் |
| விசுவநாதபுரம் | பி. சு. வ. பழநியப்ப செட்டியார் அவர்கள் |
| காரைக்குடி | சா. கணேசன் அவர்கள் M.L.C. |
| புதுவயல் | S. மெய்யப்பன் அவர்கள், B.A., B.L., |
| பள்ளத்தூர் | சுப. அருணாசலம் செட்டியார் அவர்கள் |
| கண்டனூர் | சுப. சண்முகம் செட்டியார் அவர்கள் |
| நாச்சியாபுரம் | சு. வி. நா. நாகப்ப செட்டியார் அவர்கள் |
| செம்பனூர் | கும.நா.சுப.நா. மாணிக்கம் செட்டியார் அவர்கள் |
| நாட்டரசன்கோட்டை | வெ. கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள் |
| பாகனேரி | பெரி. அழ. மு. மு. அண்ணாமலை செட்டியார் அவர்கள் |
| கொப்பனாபட்டி | மு. ப. மு. ராமசாமி செட்டியார் அவர்கள் |
| நற்சாந்துபட்டி | KM.P.R.முத்துராமன் செட்டியார் அவர்கள் |
| கூழிபிறை | மு. கரு. ராம. ராமசாமி செட்டியார் அவர்கள் |
| நெற்குப்பை | சோமலெ அவர்கள். |